# பரம குரு

கடவுள், மனித உருவத்தில் குருவாய்
உலகில் வந்து

## பாவிகளை இரட்சித்தல்

### சிவஞான போதம்

சூத்திரம் 8

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்
டன்னிய மின்மையின் அரன் கழல் செலுமே.

இயற்றியவர் :
**S.T. இரத்தினம்**

பதிப்பாளர் :
**V. சீனிவாசன்**
50, தந்தி ஆபீஸ் ரோடு, தூத்துக்குடி - 2.

**2001**



முன்பதிப்புகளில் 4300
நான்காம் பதிப்பு 1000
ஐந்தாம் பதிப்பு 1000

விலை : ரூ. 10.00

சைவ சித்தாந்தக் கழக வெளியீடான

## செந்தமிழ்ச் செல்வி

என்னும் பத்திரிக்கை 1959ம் ஆண்டு அக்டோபர் மாத இதழில் குறிப்பிட்டிருப்பது.

இந்நூல், கடவுள் ஒருவனே என்பதும், அவன் குருவாய் எழுந்தருளி ஆட்கொண்டருளுவன் என்பதும் பண்டைத் தமிழ் நூல் மேற்கோள்- களுடன் நன்கு விளக்குகின்றது. ஆசிரியர் எல்லா நெறிகளின் மெய்ந்நூல்களையும் கற்றுள்ளவ- ரென்பது காட்டும் மேற்கோள்களால் தெரிய வருகின்றது. குருவின் இன்றியமையாமையை உணர்த்தும் இந்நூல் எல்லார் கையிலும் இருத்தற்குரிய தொன்றாகும்.

# முகவுரை

அறம், பொருள், இன்பம், வீடும் பயப்பது நூற் பயன். எடுத்த நூல்களை விரைவாய் வாசித்துத் தூர வீசி விடுவது நூதன நாகரிகத்தில் ஒன்று. அப்படி வாசித்தால் இந்நூலால், வாசிப்பவர் பயன் எய்தார். விரைவால் பார்க்கில் தெரியாதொன்றும் ; விரையாதேற்கில் கருகா தெனக ; சிலநாள் பழகில் சிலவும் தெரியா ; பல நாள் பழகில் பலவும் தெரியும். ஆகையினால், இந்நூலின் செய்யுட்களையும், வசனங்களையும் மன அமைதியுடன் வாசித்துத் தியானியுங்கள். மனனமும் செய்யுங்கள். அப்பொழுது ஆன்மார்த்த உணர்ச்சி அரும்பும். அறிவொளி வீசி அகவிருள் அகற்றும். மத உன்மத்தர், தப்பர்த்தம் செய்வோர், செவித்தினவுள்ளோர் முதலியோர் எந்நூலாலும் பயன் பெறார்

ஏதுந் தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாதன் நீ நீக்க வொரு ஞான விளக்கில்லையோ ?

அல்லும் பகலும் அகண்ட வடிவே உனை நான்
புல்லும்படி எனக்கோர் போதனை தான் இல்லையோ ?

"ஒன்றான மெய்த் தேவனாகிய உம்மையும், நீர் அனுப்பினவராகிய உலக சற்குருவையும் அறிவதன்றோ முக்தி அனுபவம் (நித்திய ஜீவன்)" ஆகாய வசனியால் அகன்ற தூரத்தின் அதிசய அனுபவங்களை அருகில் கேட்கச் செய்யும் இயற்கைச் சக்தியிலும் பெரிய சக்தியுடைய பெரியோய், உனதருளால் சிறியேனை ஆட்கொண்டு ஜட உலகில் கட்டுப்பட்டுழலும் மயக்கத்தில் நின்று அடியேனை விடுவித்து, ஆவிஉலகத்தின் ஜீவ அநுபவத்தைத் தாரும் என நம்பிக்கையுடன் பிரார்த்தித்து முயற்சிப்போமாக. அவன் அருள் நம்மைச் சந்திக்கும் என்பது நிச்சயம்.

# அவனருள் பெற மன உண்மை மிகமிக அவசியம்

இதோ ! உள்ளத்தில் உண்மை இருக்க விரும்புகிறீர் ; அந்தக் காரணத்தில் ஞானத்தை எனக்குத் தெரியப்படுத்துவீர்'' என ராஜரிஷி ஒருவர் கூறுகிறார். உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று கூறுவார் உத்தம அறிவு, உணர்வு, ஒழுக்கம், கடவுளருள் முதலியவற்றைப் பெறார்.

மகனைப் படிக்க வைத்த பத்தாம் நாளில் ''இன்னும் என் மகனுக்கு எடுத்த தாளைப் படிக்கத் தெரியவில்லையே'' எனக் குறை கூறிய அவசரப் புத்திகாரனைப் போல் இச்சிறுநூலை வாசிக்கிறவர்கள் நினைத்து விடாதீர்கள்.

எடுத்த நூல் விளங்காவிடில் கீழே வைத்து விடுபவர் தேர்ச்சி பெற முடியாது, மனனம் செய்தும், விளங்காததைக் கேட்டும், பல நாள் முயன்றும் படிக்க வேண்டும். வீண் அர்த்தம் செய்து படிப்பது விபத்துண்டாக்கும். சுத்த மனதுடன் சுத்தனைத் தொழுது படியுங்கள் ; சுத்தம் பெறுவீர். அத்தன் அருள் செய்வான்.

எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப தறிவு (குறள்)

சு. இரத்தினம்

# பரமகுரு

கடவுளை அறிதலே கல்வியின் சிறப்பு - திருக்குறள் 1:2

கற்றதனாலாய பயன் என் கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் எனின்.

(கருத்து) வால் அறிவன் - சுத்த அறிவை உடையவனாகிய கடவுளின், நல்தாள் - நல்ல பாதத்தை, தொழா அர் எனின் - தொழாவிட்டால், கற்றதனாலாய பயன் - படிக்கிறதினால் உண்டாகும் பிரயோஜனம், என் கொல் - யாது ?

## சிவவாக்கியம் : 10-ம் கவி

அரியுமல்ல அரனுமல்ல அயனுமல்ல அப்புறங்
கருமை வெண்மை செம்மையுங் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பெண்ணுமாணும் அல்லவே
துரியமும் கடந்து நின்ற தூர தூர தூரமே

கடவுள் பஞ்சேந்திரியங்களாலும் காணப்படாத கடந்த பொருளாயிருக்கும்போது அவரை எப்படி அறிய முடியும் ?

உண்மை உள்ளத்தவர், உலக இயற்கையிலும், பக்தர் மூலமாயும் விசேஷமாய் குரு மூலமாயும் அறியமுடியும்.

## திருக்களிற்றுப்படியார் 5-ம் கவி

ஆகமங்கள் எங்கே ? அறு சமயம் தாமெங்கே ?
யோகங்கள் எங்கே ? உணர்வெங்கே ? - பாதத்து
அருள் வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல், அந்தப்
பெருவடிவை யார் அறிவார் பேசு.

(கரு) வேதாகமங்களும், அறுசமயங்களும், யோகங்களும், அறிவும் என்ன செய்யும். தெய்வ திருவடியின் அருள் வடிவத்தையுடையவர் தானாக வந்து நம்மை ஆளாவிடில் கடவுளின் பெருவடிவத்தை யார் அறிய முடியும் ?

### தாயுமானவர் பராபரக் கண்ணி 116

என்போல் எளியவரும் எங்கெங்கே பார்த்தாலும்
உன் போல் வலியவரும் உண்டோ ? பராபரமே.

### திருமந்திரம் 459-ம் பக்கம் 2-ம் கவி

காட்டும் குறியும் கடந்த அக் காரணம்
ஏட்டின் புறத்தே எழுதிவைத் தென்பயன் ?
காட்டும் குருநந்தி காட்டில் அல்லாலது
ஆட்டின் கழுத்தின் அதர் கறந்தற்றே.

(கரு) உருவமும் அடையாளமும் இல்லாத காரணனாகிய கடவுளை, ஏட்டிலே எழுதி வைத்தால் என்ன பிரயோஜனம்? குருவாகிய நந்தி, கடவுளை வெளிப் படுத்தாவிடில், ஆட்டின் கழுத்திலுள்ள அதரில் பால் கறத்தலை ஒக்கும்.

### திருமந்திரம் 6:14

எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக் கொண்டிங்கே அளித்தலால்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே.

(கரு) சர்வாண்டத்திற்கும் எட்டாதவர், சர்வ மண்டலத்திலும் வியாபியாய் நல்லார் உள்ளத்தில் மிகுதியான அருளைக் கொடுத்தலாலும், மனிதர் யாவரும் ஈடேற்றம் பெற இவ்வுலகத்தில் வந்து அருள் செய்தலாலும், சொல்ல முடியாத சற்குரு சுத்த சிவத்தன்மையுடையவராதல் வேண்டும்.

<u>கவனிப்பு</u> : சுத்த சிவம் என்னும் போது, அசுத்த சிவம் உண்டென்பதும் அறிய வேண்டும். கொங்கண மகாரிஷி கூறியதாவது : கடவுளுக்குப் பெண்டேது? பிள்ளையேது? காமகுண லீலை முதலானதேது? கடவுளுக்குப் பகடி சீட்டுத் தாயமேது? காடுகளில் வேட்டைகட்குத்

திரிவதேது ? கடவுளுக்குக் காமிகளின் தொழிலேயில்லை. காருண்யத்தொழில் ஒன்றே கடவுள் பாரம். இப்படிப்பட்ட தீயோனை கடவுள் எனச் சொல்வது பாவமும் அறியாமையும் ஆகும்.

### சிவஞான சித்தியார் 8.6:28

சூரிய காந்தக் கல்லிடத்தே செய்ய
சுடர் தோன்றியிடச் சோதி தோன்றுமா போல்,
ஆரியனாம் ஆசான் வந்தருளால் தோன்ற
அடி ஞானம் ஆன்மாவில் தோன்றும் . . .

(கரு) சூரிய காந்தக் கல்லிடத்தில் பிரகாசமான சுடராகிய சூரியன் தோன்றினால், சோதி பிரதி விம்பித்து வருவது போல, மேலான குரு வந்து கிருபையால் அவர் திருவடி காணப்பட்டால், ஞானம் மனிதர் ஆத்மாவில் தோன்றும்

### கடவுள் குருவாக வந்து மனிதரை இரட்சித்தல்

**ஒழிவிலொடுக்கம்.**

குருவுருவங் கொண்டிக் குவலயத்துள் தோன்றிப்
பருவரலை நீக்கும் பரன்

(கரு) கடவுள் குரு உருவம் எடுத்து, இவ்வுலகில் வந்து பாவ துன்பத்தை நீக்குவார்.

### தாயுமானவர் பராபரக் கண்ணி

பந்தமெல்லாம் தீரப் பரஞ்சோதி நீ குருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே.

(கரு) மனிதரைப் பாவக் கட்டிலிருந்து விடுதலையாக்க, சோதிக் கடவுளாகிய நீ குருவாக வந்த வடிவத்தை மறவேன்.

அன்பைப் பெருக்கி என தாருயிரைக் காக்க வந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே

### சீடாசரம்

கட்டுண்ட கள்வன்தானோ கட்டினை விட்டுக் கொள்வான்
விட்ட வேதனையைத் தீர்த்து விடுவிப்பான் ஒருவன்
வேண்டும்
அட்டமா சித்தியோ காலறினால் அறியலாகும்
தட்டறப் பாசந் தீர்க்கத் தற்பர குருவே வேண்டும்.

(கரு) வேறொருவனால் கட்டப்பட்ட திருடன் தன் கட்டைத் தானே அவிழ்த்துக் கொள்வானோ ? வேதனையைத் தீர்க்கும்படி வேறொரு ஆள் வேண்டும். அது போல மனிதரின் பாவம் முழுவதையும் தீர்க்க, கடவுளே குருவாக வர வேண்டும். எட்டு மகா சித்திகளையோ மனிதரின் நாலில் ஒரு பங்கு அறிவைக் கொண்டு அறியலாம்.

கவனிப்பு : சித்துக்களை அடைவது வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியம் என அநேகர் நினைக்கின்றனர். அப்படியல்ல, பாவத்திலிருந்து விடுதலை பெறுவதும் மன்னிப்படைவதுமே நமக்கு அவசியம் எனக் கவிகள் கூறுவதைக்கவனிக்க.

### நிஷ்டானுபூதி

சரிதையின் தொழிலினாலும் சற்கிரியையினும் யோகம்
புரிதரும் முயற்சியானும் பொருந்தோணா தென்பர்
மேலோர்
உரிய தேசிகன் உரைக்கும் ஒரு மொழி உண்மையாலே
அரிய மெஞ்ஞான வீடு இங்கடைவது திண்ணம் தானே.

(கரு) சரிதை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றால் பாவத்திலிருந்து விடுதலை பெற முடியாது. அவ்விடுதலையைத் தரத்தக்க குரு கூறுகின்ற சத்தியமான ஒரு உபதேச வார்த்தையினாலே பெறுதற்கரிய மெய்ஞானத்தையும் விடுதலையையும் இவ்வுலகத் திலேயே பெற்றுக் கொள்ளுவது நிச்சயம்.

## பட்டினத்தார் : பொது 30

எட்டுத்திசையும் பதினாறு கோணமும் எங்கும் ஒன்றாய்
முட்டித்ததும்பி முளைத்தோங்கும் சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர், கருத்தில் வையார்
பட்டப்பகலை இரவென்று கூறிடும் பாதகரே.

(கரு) எங்கும் நிறைந்த சோதியாகிய கடவுள், பூவுலகில் வெளிச்சமாய் முளைத்து விளங்கினார். வெளிச்சமாய் வந்த கடவுளை, மூடர் தங்கள் இருதயத்தில் வையாமல், பகலை இரவென்று சொல்லும் பாதகரானார்கள்.

## சிவவாக்கியம் 315

நீரிலே முளைத்தெழுந்த தாமரையின் ஓரிலை
நீரினோடு கூடி நின்றும் நீரில்லாத வாறுபோல்
பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்
பாரினோடு கூடி நின்ற பண்பு கண்டிருப்பீரே.

(கரு) தாமரையானது நீரிலே முளைத்தும், நீருடன் ஒட்டிக் கொள்ளாதது போல, கடவுள் உலகத்தில், பாவமனித ரூபத்தில் பிறந்து வேத பண்டிதராக வந்தாலும், பாவமில்லாத பரிசுத்தராக வாழ்ந்த தன்மையை அறிந்து வாழுங்கள்.

## திருமந்திரம் 19-ம் பக்கம்

விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்க்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைகாவல் மேல் வைத்து
உண்ணின் றுருக்கிஓர் ஒப்பில்லா ஆனந்தக்
கண்ணொன்று காட்டிக் களிம்பறுத்தானே

(கரு) பரலோகத்திலிருந்து இவ்வுலகில் இறங்கி, பாவ வினைகளுக்கு ஈடு செய்யும் பொருட்டு மனித சரீரத்தை எடுத்து, தனது கிருபை பொருந்திய பாதத்தை மனித புத்திக்குக் காவலாக வைத்து, இருதய ஆசனத்தில் இருந்து கொண்டு, பாவத்தினால் கடினப்பட்ட இருதயத்தை

இளகச் செய்து, தனது ஆனந்தக் கண் காட்டி பாவ அழுக்கை நீக்கினான்.

## பகவத் கீதை 18:66

எல்லா அறங்களையும் இங்கறவிட் டென்னையே
நல்லார் சரணமா நண்ணியிடு - தொல்லாரும்
பாவங்கள் நின்றுன்னைப் பற்று விடுவிப்பனான்
தாவம்தனை ஒழி நீதான்.

(கரு) எல்லா புண்ணிய கிரியைகளையும் விட்டு, என்னையே நன்மை பொருந்திய புகலிடமாகச் சேர்ந்து கொள். நான் உன்னைப் பழைமையான பாவங்களிலிருந்து விடுவிப்பேன் ; நீ விசனத்தை விட்டுவிடு.

## திருவாய்மொழி

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி
நின்ற வண்ணம் நிற்கவே
துயரின் மலியும் மனிதப் பிறவியில் தோன்றிக்
கண் காண வந்து
துயரங்கள் செய்தே தந்தெய்வ நிலை உலகில்
புகவைக்கும் அம்மான்
துயரமில் சீர்க்கண்ணன் மாயன் புகழ்
தூற்ற யானோர் துன்பமிலேனே.

(கரு) துயரமில்லாத இன்ப வெளிச்சமாயிருக்கிற கடவுள், தன் இன்ப ஒளி யாதும் மாறுபடா நிலையில் எப்பொழுதும் இருந்தபடியே யிருக்க, துன்பம் நிறைந்த மனிதப் பிறவியில் உலகத்தார் காண வந்து, துன்பங்கள் பட்டு, தமது தெய்வத் தன்மையை மனிதருள்ளத்தில் விளங்க வைத்தார். இத்தூலக்கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்திருக்கும் துயரமற்ற, பெருமை பொருந்திய பார்வையை உடைய கடவுளின் புகழை யான் கூறுவதால் மகிழ்ச்சி உடையவனாகிறேன்.

### சிவஞான சித்தியார் 8-ம் சூத்திரம்

மன்னவன் தன் மகன் வேடரிடத்தே தங்கி
வளர்ந்தவனை அறியாது மடிங்கி நிற்பப்
பின்னவனும் என் மகன் நீ, என்றவரில் பிரித்துப்
பெருமையோடும் தானாக்கிப் பேணுமாபோல்
துன்னிய ஐம்புலவேடர் சுழலில் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந்தொல்லுயிரை
மன்னும் அருட்குருவாகி, வந்தவரினீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்

(கரு) அரசனுடைய மகன் வேடருக்குள் சஞ்சரித்து வளர்ந்து தன் தகப்பனை அறியாமல் மயங்கி நிற்க, பின்பு அரசனே வந்து நீ என் மகன் என்று சொல்லி, அவ்வேடரிடத்திலிருந்து பிரித்து மாட்சிமையுடன் தன்னைப்போல் அவனை பாதுகாப்பது போல, நெருங்கிய ஐம்புலன்களாகிய வேடரது கூட்டத்தில் அகப்பட்டு, கடவுளை அறியாமல் துக்கப்படுகின்ற ஆத்துமாவை, நிலையுள்ள அருளுடைய குருவாய் வந்து அவ்வேடரிலிருந்து பிரித்துப் பாவத்தைப் போக்கி, தன்னைப் போலவேயாக்கித் தனது மலரடிக்கீழ் வைப்பான்.

### தாயுமானவர் 82.

ஞான நெறிக்கேற்ற குரு, நண்ணரிய சித்தி முத்தி
தானந் தருமந் தழைத்த குரு - மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு, என் சிந்தை
கோயிலென வாழுங் குரு,

(கரு) கடவுளே குருவாக வந்து எப்படிப்பட்ட தன்மையுடையவராய் விளங்கினாரெனில் : ஞான வழியைக் காட்டக் கூடியவர், பெறுதற்கரிய சித்திகளும், முத்தியும், தானமும், தருமமும் தம்மிடத்தில் வளரத்தக்கவர். மாட்சிமையாய்த் தாயைப் போல வந்து என்னை எனக்குக் கொடுத்த குரு என் மனதைக் கோயிலாக ஏற்று வாசம் செய்யும் குரு,

## திருமந்திரம் 6, 1:6

சுத்தசிவன் குருவாய் வந்து தூய்மை செய்
தத்தனை நல்கருள் காணா அதி மூடர்
பொய்த் தகு கண்ணால் நமர் என்பர், புண்ணியர்
அத்தன் சிவன் என்றடி பணிவாரே.

(கரு) கடவுள் பரிசுத்த குருவாக இவ்வுலகத்தில் தோன்றித் தம்மை வெளிப்படுத்தின கிருபையை அறியாத மூடர், (பொய்யால் தன் இருதயத்தை மறைக்கும்படி செய்து கொண்ட மனக்கண் குருடானவர்கள்) அவரை நம்மைப் போல் மனிதர் என்பார். பக்தரோ, இவரே கடவுள் என்று கும்பிடுவார்கள்.

## திருமந்திரம் 1, 10:27

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே

(கரு) குருவின் முகத்தைப் பார்த்தலும், அவருடைய நாமம் சொல்லலும், அவருடைய வார்த்தை கேட்டலும், அவருடைய குணத்தின் உருவம் இன்னதெனத் தியானித்தலும் தெளிவுண்டாக்கும்.

## வாதவூரர் புராணம், புத்தரை வாதில் வென்ற சருக்கம் 76-ம் செய்யுள்

நீற்றினை அணிந்தது என் இன்னிறைவன் என்றே
சாற்றினை உயிர்க்கிடர் தணிப்ப என எண்ணாய்த்
தோற்றியுள தம்புதல்வர் துன்பம் உறும் அந்நோய்
மாற்றும் வகை அன்னையர் அருந்திய மருந்தாம்

(கரு) தன் பிள்ளைகள் நோயினால் வருத்தப் படும்போது, தாய்மார் மருந்துண்டு அவைகளை இரட்சிப்பது போல,

உயிர்களுடைய துன்பத்தை நீக்கும் பொருட்டு இறைவன் திரு நீற்றை அணிந்திருக்கிறார் என்று எண்ணிக் கொள்ளுவாயாக.

நன்னூல் பவணந்தி முனிவர் பாடியது, காப்பு.

அருவுருமாகிய அமலன தடியிணை
ஒருமையோ டுள்குதும் ஒளிபெறற் பொருட்டே

(கரு) நாம் நமது இருளடைந்த இருதயத்தில் தெய்வீக ஒளியைப் பெறும்படி உருவமில்லாமலும், உருவமாகவும் விளங்குகின்ற பரிசுத்தமான கடவுளுடைய பாதத்தை ஒருமைப்பட்ட மனத்துடன் தியானிக்கிறோம்.

மேற்கண்ட கவிகளைக் கவனிக்குமிடத்து நாம் காணக்கூடாத அரூபியாயிருக்கிற கடவுள் உருவமுடைய வராகிக் குருவாய் வந்து யாதொரு மாயபாச பந்தங்களுக்கும் உட்படாமல் பரிசுத்தராய் விளங்கி, உபதேசித்து, உபதேசித்தபடி வாழ்க்கை நடத்தி, தமது உபதேசத்தைக் கேட்டு, தம்மைப் பற்றிக் கொண்டு நடக்க விரும்புகிறவர்களுக்கும், தமது உபதேசப்படி நடக்கச் சக்தியளித்து அவர்களுக்குச் சொந்தமாய், உயிர்க்குயிராய், அவர்களுக்குள்ளே வசித்து, உளவு சொல்லுங்கோனாய் அவர்களை ஆளுவார் என்பது தெளிவாகிறது.

## கடவுள் யார் ?

என ஆராய்வோமாயின், இரக்ஷணிய மனோகரம், போற்றித் திருவிருத்தம் 1-ம் கவியில்,

ஆதிமத்யா ந்த ரகித நிஷ்களங்க
அநாதியங் கடவுளே, போற்றி !
சோதியாய் அகண்டாகாரமாய் விளங்கும்
தூய சைதன்யமே, போற்றி !
பேதியா நிலை நின்றுலகெலாம் தந்த
பிரணவ தெய்வமே போற்றி !
நீதியோடிரக்க சமரச நெறியை
நிறுவிய நிமலனே, போற்றி !

(கரு) ஆதியும், நடுவும், அந்தமுமில்லாதவரே, மாசற்றவரே, நித்திய கடவுளே தோத்திரம். சோதியாயும், பூரணமாயுமிருக்கிற பரிசுத்த ஞான ரூபனே தோத்திரம். ஓர் பேதமில்லாது நிலையாயிருந்து உலகத்தை படைத்த மூலகாரண கர்த்தாவே தோத்திரம். நீதி, இரக்கம் என்னும் இரண்டுக்கும் முரண்பாடில்லாத சமாதான வழியை ஏற்படுத்திய பரிசுத்தனே தோத்திரம்.

என்பதைக் கவனிக்குமிடத்து, நீதியும், இரக்கமும் உடையவரே கடவுள் என்றும், நீதிக்கும் இரக்கத்துக்கும் சண்டை இருக்கிறது என்றும், கடவுள் சண்டையை நீக்கி சமாதானத்தை உண்டாக்கினார் என்றும், இப்படிப்பட்ட கடவுளையே துதிக்க வேண்டியதென்றும் அறிகிறோம்

அவற்றின் சண்டை எதுவென்றால், மனிதர் பாவிகளானதால் மனிதரைத் தண்டிக்க வேண்டும் என நீதி கூறுகிறது. இரக்கமோ அது கூடாது, மன்னிக்க வேண்டும் என்கிறது. கடவுளோ நீதி உடையவர். ஆதலால் மனிதரைத் தண்டிக்க வேண்டும். கடவுள் இரக்கமும் உடையவர். ஆதலால் மனிதரை மன்னிக்க வேண்டும்.

தண்டித்தால் இரக்கம் உடைய கடவுள் அல்ல. மன்னித்தால் நீதியுடைய கடவுள் அல்ல. இரக்கமிருந்து நீதி இல்லாதவராய்ப் போனால் கடவுள் இலட்சணம் இல்லாதவராகி விடுவார். நீதி இருந்தும் இரக்கம் இல்லாதவராய்ப் போனாலும், கடவுள் இலட்சணம் இல்லாதவராகி விடுவார். இவ்விரண்டு குணங்களையும் ஒருமிக்க நிறைவாக உடையவரே கடவுள்.

மனிதர் அனைவரும் ஜென்மத்திலும் கன்மத்திலும் பாவிகள். எப்படியெனில் நம் தாய் தகப்பன்மார் பாவிகள். அவர்களிடத்துப் பிறந்த நாமும் பாவத்திலேயே ஜென்மித்தோம். ஆதலால் நாம் ஜென்மப் பாவிகள். நாம் வளர்ந்து அறிவுடையவர்களான போது பாவத்தைச் செய்யக் கூடியவர்களானோம். ஆதலால், நாம் கர்மப்

பாவிகள். நாம் பிறப்பிலும், செய்கையிலும், பாவிகளானதால் தேவ நீதியின்படி தண்டனைக் குரியவர்களே. ''பாவத்தின் சம்பளம் மரணம்'' என விவிலியம் கூறுகின்றது.

மனிதனுக்கு உயிர் இரத்தம். இரத்தம் அற்றுப் போனால் உயிர் உடலை விட்டு நீங்கும். மனிதனின் உயிர் வாழ்வுக்கு ஆதாரம் இரத்தமே. இரத்தமே பாவத்திற்கும் காரணம். ஆதலின் பாவத்திற்குத் தண்டனை இரத்தம் சிந்துதலே.

இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பு உண்டாகாது. ஆத்துமாவிற்காகப் பாவ நிவர்த்தி செய்வது இரத்தமே என்கிறது அருள் வேதம். இந்தியாவின் முதல் நூலாகிய ருக் வேதம் 10:31:6,8 42,2ல் ''விஸ்வகர்மா எனப்பட்ட பிரஜாபதியாகிய புருஷன் தன்னையே பலியாக்கி, இரத்தம் சிந்தி நம்மை மீட்டுக் கொள்வானாகவும்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**சாமவேதம் தாண்டியமகா பிராமணம் :**

''சிருஷ்டிகர்த்தவும், ஜகத் இரட்சகருமான பிரஜாபதியென்ற மூலபுருஷர், தம்மைத் தாமே பலியிட்டார்''

புருஷ சூக்தம் ''பலியிடுகிறவரும், பலியை ஏற்றுக் கொள்ளுகிறவரும் கடவுளே'' எனக் கூறுகிறது. பலியைப் பற்றி நான்கு வேதங்களாகிய ருக், யஜூர், சாமம், அதர்வணம் என்ற நூல்களிலும் உபநிடதங்களிலும், மற்றைய அநேக நூல்களிலும் கூறப்பட்டிருக்கிறது. ஆதிகாலத்தில் சாதாரண ஜனங்களும் பலியிட்டு வந்திருக்கின்றனர். உலக முழுவதிலுமுள்ள புராதன மதங்கள் பலியிடும் வழக்கத்தையுடையன. தற்காலத்திலும் அர்த்தம் தெரியாமலே நம் தேசத்திலும் ஜனங்கள் பலியிட்டு வந்ததை நாம் அறிவோமே.

இராமலிங்க சுவாமிகள் திருவருட்பாவில் ''பட முடியாதினித் துயரம் பட முடியாதரசே, பட்டதெல்லாம் போதும் இந்தப் பயம் தீர்த்து இப்பொழுதென், உடலுயிர் ஆதிய வெல்லாம் நீ எடுத்துக் கொண்டு, உன் உடல் உயிர் ஆதியவெல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்'' எனக் கூறுகிறபடி பாவ விஷங்கலந்த நமது உடல் உயிரை மாற்றி அமைக்க, ரூபமில்லாத கடவுள் பாவ மனித ரூபத்தில் பிறக்க வேண்டும். ஆகையால் தான் ஏராளமான ஞானிகள் கடவுள் மனித ரூபத்தில் குருவாக வந்தார் எனக் கூறுகின்றனர். ஆனால் மிகப் புராதன காலத்தில் தோன்றிய ருக், சாமம், உபநிடதங்களில் கூறியவற்றை விட்டு பின் காலத்து நூலாசிரியர்கள் கடவுள் மனிதப் பிறப்பில் வந்தாரென்றும், பாவத்திலிருந்து மீட்டுக் கொண்டாரென்றும் நினைத்துக் கொள்ள வேண்டுமே தவிர, உண்மையில் அவ்வாறு நடக்கவில்லை என்றும் கூறுகிறார்கள். உதாரணமாக, புதுக்கோட்டை மகாராஜாவின் பாடசாலையில் பண்டிதராகிய B.V.காமேஸ்வரமய்யர் M.A., தாம் ஆங்கிலத்தில் புருஷ சூக்தத்தை மொழி பெயர்த்து அர்த்தமும் எழுதியிருக்கிறதில் 36.41-ம் பக்கத்தில் ''பலியிடுகிற வரும் பரப்பிரம்மமே என்று மனக் கண்ணினால் பாவிக்க வேண்டும்'' என்று சொல்லியிருக்கிறார்.

உலகத்தைப் படைத்து, இதில் மனிதர்களையும் சிருஷ்டித்த தேவன், தம்மை உலகத்துக்கு வெளிப்படுத்தவும் மக்களை மீட்டுக் கொள்ளவும், நீதியையும் இரக்கத்தையும் சமாதானப்படுத்தும் சமாதானப்பிரபுவாக வெளிப்படாவிடில் தெய்வ நீதிக்குப் பங்கம் ஏற்படும். நீதிக்கு ஈடுசெலுத்தி அதாவது பலி செலுத்தி நீதியைத் திருப்தி செய்யாவிடில் கடவுளின் அன்பும் வெளிப்படாது.

**திருமந்திரம் 1,27:1.**

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே.

என்ற திருமூலர் கூற்றும் பொய்யாகும். கடவுள் அன்பே என்பது சரித்திரப்படி ரூபிக்கப்பட்டால் தான் மேற்கூறிய கவிகள் உண்மையாகும்.

**சிவஞானபோதம், சிவஞான சுவாமிகள் எழுதிய சிற்றுரை. 158-ம் பக்கம்**

இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழை பால்
நல்லாய் உளவாமால் நீர் நிழல் போல் - இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று.

. . . . குருவாதல் உபசாரமேயன்றி ஏனைய போல் உண்மையாதல் செல்லாது என்பாரை நோக்கி உண்மையாதலை உவமையைக் கொண்டு உறுதிப்படுத்திச் சொல்லப்பட்டது.

(கரு) நல்லாய் - அறிவால் நன்மையுடைய மாணாக்கனே, ஏந்து இழைபால் முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உளவாம் ஆல் - ஏந்திய இழைகளையுடையவளுக்குத் தன் குழந்தையின் மேலுள்ள கண்ணால் காணக்கூடாமல் அருவாகிய அன்பினைப் பிறர் அறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பின் உருவாகிய பாலும் கண்ணீரும் அவள் குழந்தையைப் பெறுமுன் இல்லாதிருந்தும் கண்டபின் உண்டாவது போல,

நீர் நிழல் போல் இல்லா அரு ஆகி நின்றானை ஆர் அறிவார். தானே உரு ஆகி உற்றுத் தோன்றானேல் - நீரின் கண் நிழல் போல் மனிதரிடத்தில் காணப்படாமல் அருவமாய் நின்ற கடவுளை, அவனே குரு வடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்தாவிட்டால் யார் அறிவார்.

பக்தரை ஆட்கொள்ள பகவான் மனிதப் பிறவி எடுக்காமல் பூவுலகில் பல சமயங்களிலும் மனித ரூபத்தில் தோன்றி மறைந்தது உண்மையேயாயினும், பாவத்தை நீக்கும் பொருட்டு பகவான் பாவ மானிடப் பிறவியில் வந்து தனது மாமிச சரீரத்தில் துயரடைந்து பாவ தண்டனையை அனுபவித்து அதே சமயத்தில் தெய்வ நீதியையும், தெய்வ இரக்கத்தையும் நிறைவேற்றி, சமாதானப் படுத்தி, தெய்வத் தன்மையை உலகுக்கு விளக்கி, பாவ மன்னிப்பு, பாவத்திலிருந்து விடுதலை, பாவத்திலிருந்து ஜெயம் அதாவது பாவஞ் செய்யாதிருக்கும் சக்தி முதலியவற்றை, தம்மை நம்புகிறவர்களுக்கு அருளிச் செய்கிறவராயிருக்க வேண்டும். இப்படிச் செய்ய தெய்வ குரு தம்மை ஒப்புக் கொள்ளும் பாவிகளுடைய இருதயத்திலும் வசிக்கிறவராயிருக்க வேண்டும்.

மேற்காட்டிய கவிகளிலும் நாம் இக்கருத்தை விவரமாய்க் காண்கிறோம். அப்பாப்பிள்ளைத் தோத்திரப் பாமாலையிலும் 12-ம் கவி :

அடியேன் இப்பாவமயலில் அழுந்தா வண்ணம்
அமலகுரு வடிவினை நல்லருளால் காட்டித்
திடமாகத் திருமறை நூல் திறமுநாட்டித்
தேடரிய ஞான நிட்டை தெளிய ஊட்டி
உடனாகி உயிர்க்குயிராய் உள்ளே நின்றாங்கு
உளவு சொன்ன பெருமானை, உம்பர்கோனை,
விடவேறு கதியுளதோ ? விழுமி தம்மா,
விண்ணகத்தும் மண்ணகத்தும் வினையினேற்கே !

(கரு) பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் பாவியாகிய நான் இவ்வுலகில் பாவ மயக்கத்தில் பிடிபட்டு அலையாதபடி, தமது இரக்கத்தால் பரிசுத்த குரு உருவை எனக்குக் காட்டி, உறுதியாய் வேதத்தின் பொருளை நாட்டி, தேட முடியாத தெய்வத்தோடு உறவாகும் ஞான சமாதியை யாவரும் தெளிவாய் விளங்கிக் கொள்ளத்

தக்கதாகச் செய்து, நம்முடனிருந்து, நம் உயிர்க்குயிராய் உள்ளத்திலிருந்து, அவ்விடமுள்ள இரகசியங்களை வெளிப்படுத்தின ஆண்டவராகிய தேவலோக அரசனைத் தவிர வேறு கதி எனக்கு உண்டோ ? மண்ணிலும் விண்ணிலும் இதுவே பாவியாகிய எனக்குப் பெரிது என்கிறார்.

கடவுள் பலியில்லாமல் மனிதரின் பாவத்தை மன்னித்து விடக்கூடாதா ?

நினைத்தது முடிக்கின்ற சர்வ சாமர்த்தியமுள்ள கடவுள், எல்லா உலகங்களையும் ஒரு சொல்லால் படைத்து, தமது சொல்லாலே உலகத்தை நடத்தி வருகிற கடவுள், தமது சொல்லாலேயே மனிதரைப் பார்த்து எனது மக்களாகிய மானிடக் குழாங்களேயான் உங்கள் மேல் அன்புடையவனாயிருப்பதால் உங்கள் பாவ தோஷங்கள் யாவற்றையும் மன்னித்திருக்கிறேன், நீங்கள் யாவரும் பரிசுத்தராகி முக்தி பெறக் கடவீர்கள் என்று சொல்லி விடலாமே எனக் கேட்கலாம். ஆதியில் உலக முழுவதிலும் இருந்த ரிஷிகளும் தபோதனர்களும் எண்ணிறந்த பக்தர்களும் கூறியவற்றைக் கவனிக்குங்கால், கடவுள் இரக்கமுடையவராய் மாத்திரமிருந்தால் மன்னிக்கலாம். அவர் நீதியும் உடையவரல்லவோ, நீதியின்படி பாவத்திற்குத் தண்டனை கொடா விட்டால் கடவுள் தமது நீதிக்குப் பிசகு செய்தவராகி விடுவார். நீதியைத் திருப்தி செய்யப் பாவிக்குப் பதில் தண்டனை அனுபவிக்க ஒருவர் ஏற்றுக் கொள்ள வேண்டும். பாவியின் மேல் இரக்கமுள்ள தெய்வம் தாமே பாவிக்குப் பிணையாளியாகி அரூபியானவர் ரூபமாகி ; அளவில்லாதவர் - அளவுக்குட்பட்டவராகி ; பாவமில்லாதவர் - பாவ மாம்ச ரூபத்தில் வந்தும், பாவமில்லாதவராய்த்தம்மையே பலியாக்கித் தமது இரக்கத்தையும், நீதியையும் நிறைவேற்றி மனிதருள்ளத்தைக் கவரவும், தம் தெய்வ

நிலை உலகில் புக வைக்கவும், தம்மை நம்பும் மக்களின் உள்ளத்தையே தமக்குக் கோவிலாக்கவும் திருவுளம் கொண்டிருந்ததைக் காண்கிறோம்.

மேற்காட்டியவாறு காணப்படக்கூடியவரே தெய்வமும், குருவும், இரட்சகருமாவார். அவர் யார் ? எந்த நூல்களிலாவது வாசித்திருக்கிறோமா? இப்படிப் பட்டவரைக் கண்டுபிடிப்போமானால் அவரையே நம் மீட்பரும், குருவுமாகக் கொள்ள வேண்டும். அவரைப் பற்றி நான் அறியமாட்டேன் என்பது ஆங்காரம், மூடத்தனம், நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் எனச் சாதிக்கும் வீண் வைராக்கியம் என்ற குற்றங்களாகும். அவர் மேல் பற்று வைத்து, நமது இருதயத்தை அவருக்குக் கோயிலாக்கி, நம்மை அவருக்கு ஒப்புக் கொடுப்பதே நமக்கு ஈடேற்றமாகும். சற்குரு கூறுகிறார் : மனுஷன் உலகம் முழுவதையும் தனக்குச் சொந்தமாகச் சம்பாதித்துக் கொண்டாலும், தன் ஜீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு லாபம் என்ன ? மனுஷன் தன் ஜீவனுக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்பான் ?

மனிதர் யாவருக்கும், உலகத்தில் எப்பொழுதும் சந்தோஷமாயிருக்கவும் திருப்தியாயிருக்கவும், சாகாமலிருக்கவுமே விருப்பம். துன்பம், திருப்தியின்மை முதலியவற்றை நினைக்கும்போது மாத்திரந்தான் சாகிறது நல்லது என்று சொல்வார்களே தவிர, உள்ளான விருப்பத்திலோ சாவைப்பற்றி வெறுப்புத்தான். இப்படிப்பட்ட தங்களது ஆசை நிறைவேறும் வகையைக் காணாத அநேக அறிவாளிகள் புதுப்புதுக் கொள்கை களையும், கட்டுப்பாடுகளையும் ஏற்படுத்தி அவைகளை மதங்களாக ஸ்தாபித்தனர். அந்த மதஸ்தாபனங்கள் காலங்களாகவே சிதைந்து, ஊழல்கள் மலிந்து நலிந்தன. மதங்களை சடங்காச்சாரங்களாக்கி, அவற்றை வழக்கத்துக்கு கொண்டு வந்து, ஒவ்வொரு மதத்தினரும்,

அது தங்கள் மத வழக்கம், இது எங்கள் தேச வழக்கம் எனப் பல ஆயிரம் மூடப் பழக்க வழக்கங்களைக் குரங்குப் பிடியாகப் பிடித்து சாதிக்கின்றனர். அது சரியென நொண்டி நியாயங் கூறவும், அதை மறுக்கிறவர்களைப் பகைக்கவும், தூஷிக்கவும் செய்கின்றனர். இவற்றையெல்லாம் கவனித்த இன்னொரு சாரார், கடவுள் இல்லை ; மதங்கள் வீண் என ஆர்ப்பாட்டம் செய்கின்றனர். இப்படிப்பட்டவர்களை வெறுக்காமல் அவர்கள் கூறுகிற முக்கிய ஆலோசனைகளை ஒப்புக் கொள்ள வேண்டியதே. மக்கள் சமத்துவம் பெற்று, சமராசியாய், அறிவாளிகளாய் தேவையானவற்றைப் பெற்று, திருப்தியான வாழ்க்கை நடத்தும் திட்டங்களைச் சட்டமாக்க வேண்டும் என்கிறார்கள். அதற்கு முடியும் வகையில் யாவரும் ஒத்துழைக்க வேண்டியதே.

எந்தவித சீர்திருத்தங்களையும் கொண்டு வர வொட்டாமல் தடுக்கிற சீர்கேடுகள் மனிதரின் உள்ளத்தில் ஆழமாய்ப் பதிந்திருக்கின்றன. சற்குரு கூறுகிறதாவது : ''மனுஷருடைய இருதயத்துக்குள்ளிருந்து பொல்லாத சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்தனங்களும், கொலைபாதகங்களும், களவுகளும், பொருளாசைகளும், துஷ்டத்தனங்களும், கபடும், காம விகாரமும், வன் கண்ணும், தூஷணமும், பெருமையும், மதிகேடும் புறப்பட்டு வரும். பொல்லாங்கானவைகளாகிய இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும்'' எல்லாவற்றைப் பார்க்கிலும் இருதயமே திருக்குள்ளதும் மகா கேடுள்ளதுமாயிருக்கிற படியால் ஒவ்வொரு மனிதனும் தன்தன் இருதயத்தை முதன் முதல் சரியாக்கவேண்டும். மனிதன் தன்னைத்தான் சரியாக்கிக் கொள்ள முடியுமா ? சிலர் முடியும் என்கிறார்கள். தன்னை அறியாதவர்கள் இப்படிச் சொல்லுவார்கள். உள்ளத்திலும், வெளியிலும் பரிசுத்தமாக வாழ அவர்கள் முயன்று பார்க்கட்டும்.

அப்பொழுது தான் அவர்கள் இது எங்களால் முடியாது, நாங்கள் அசுத்தர்கள், நாங்கள் பாவிகள், எங்கள் மனதின் நினைவு கூட குற்றம் நிறைந்தது என ஓலமிடுவார்கள். உலகத்திலுள்ள தெய்வ பக்தர் யாவரும் தாங்கள் பாவிகள் என்று அறிக்கையிட்டிருக்கும் போது நாம் எம்மாத்திரம். தன் பாவத்தைத் தானே நீக்கி விட முடியாது.

சற்குரு கூறுகிறார் : ''பாவஞ்செய்கிறவன் எவனும் பாவத்துக்கு அடிமையாயிருக்கிறான்'' என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். குமரக்கடவுள் (அதாவது சற்குரு) உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள். ஔவை ''வீடு பெற நில்'' என்கிறாள் பாவத்திலிருந்து விடுதலை பெற்று வாழ் என்பது இதன் உண்மையான அர்த்தம்.

பாவத்திலிருந்து விடுதலை பெற்று வாழாத வாழ்வு மிருகத்தை விட இழிவானதே. அதை நரக வாழ்வென்றே கூற வேண்டும். தேவன் இல்லாத இடமே நரகம். அதாவது பாவம் பாவியையும் தேவனையும் பிரித்து விடுகிறது. ஆதலால், பாவியான மனிதன் தேவனைப் பார்க்க முடியாதவன். தேவனற்றவனாகி விடுகிறான். தேவனற்றவன் இவ்வுலகத்தில் எவ்வளவு ஆஸ்தியைப் பெற்றிருந்தும், எவ்வளவு பூஸ்திதியைப் பெற்றிருந்தும், எத்தனை மக்களைப் பெற்றிருந்தும், எத்தனை இன ஜனங்களைப் பெற்றிருந்தும் எத்தனை கல்வியைக் கற்றிருந்தும், எவ்வளவு மதிப்பைப் பெற்றிருந்தும் நிர்ப்பந்தனே. ஆகையால் கடவுளுக்கு உன்னைச் சொந்தமாக்கு. கடவுளை உனக்குச் சொந்தமாக்கிக் கொள். அது எப்படி முடியும் என்பாயோ ? அது உன்னால் முடியாது என்பது உண்மைதான். கடவுளே உன்னைத்தேடி குருமூர்த்தியாக வந்தார் என்று முன் நாம் படித்த கவிகளில் அறிந்தோமல்லவா ? அவர் யார் எனத்தேடியாவது கண்டுபிடிப்பது தான் புத்தி. அவருக்குத் தன்னை ஒப்புக்கொடுத்து அவருக்கு அடிமை பூண்டு நடப்பதே

பக்தி. அவரோடு ஐக்கியப்பட்டு வாழ்வதே சக்தி, அவரால் பாவ மன்னிப்பையும், பாவத்திலிருந்து விடுதலையையும், அதாவது, பாவத்தின் மேல் ஜெயத்தையும் பெற்றனுபவிப்பதே சித்தி. நீதியும், சமாதானமும் தேவ அருள் சக்தியால் சந்தோஷமும் அடைவதே முக்தி.

மேலே கூறப்பட்ட இலக்ஷணமுடைய குருமூர்த்தியான மெய்க்கடவுளும், பாவத்திலிருந்து மீட்கிறவருமான ஒருவரை அடியேன் 1912-ம் வருடம் அறிந்து, அவருக்கு அடிமையானேன். அவர் எனது மீட்பராக என்னை ஆட்கொண்டு எனது பாவப்பாரத்தை அகற்றி, தமது அன்பின் சமூகத்தில் என்னை ஆதரித்து, நிமிஷந்தோறும் என்னைத் திருத்தி ஆட்கொண்டு வருகிறார். அவர் கூறியிருப்பதாவது : ''வருத்தப்பட்டுப் பாரம் சுமக்கிறவர்களே ! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள் ; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன். நான் சாந்தமும், மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன். என் நுகத்தை உங்கள் மேல் ஏற்றுக் கொண்டு என்னிடத்தில் கற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும். என் நுகம் மெதுவாயும், என் சுமை இலகுவாயும் இருக்கிறது'' என்பது. இது எவ்வளவு உண்மையென்பதை எனது அனுபவத்தில் அவர் விளங்கச் செய்த போது எனக்கு அதிசயத்தையும் ஆனந்தத்தையும் உண்டாக்கினது. அவரைப்பற்றி ''உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்க அல்ல இரட்சிக்கவே வந்தார்'' என்று கூறப்பட்டிருக்கிறது. பாவிகளை இரட்சிக்க வந்த அவர் யார் ?

அவர்தான் ''இயேசு'' என்பது. இவருடைய பேரைக் கேட்டதும் வெறுக்கிறார்கள் ஏன் ? இயேசு என்பது நம் நாட்டுப் பதம் இல்லையே என்கிறார்கள். கவனியுங்கள், இயேசு என்ற பதம் கிரேக்க பாஷையில் உள்ளது. அதற்குத் தமிழில் ''பாவத்திலிருந்து இரட்சிக்கிறவர்'' என்று அர்த்தம்.

நம் நாட்டுத் தேவ பக்தர் ''குரு'' எனச் செப்பியிருக்கின்றனர். ''கு'' என்பதற்கு இருள். அஞ்ஞானம், பாவம் என அர்த்தம். ''ரு'' என்பதற்கு ஒழித்தல் என்றர்த்தம். இயேசு என்ற கிரேக்கப் பெயரும் குரு என்ற தமிழ்ப் பெயரும் ஒரே அர்த்தமுடையன. ஆகையால்தான் இயேசுகிறிஸ்து உலகத்தில் அவதரித்திருந்த காலத்தில் ''நீங்கள் குருக்கள் என்று அழைக்கப்படாதிருங்கள். கிறிஸ்து ஒருவரே உங்களுக்கு குருவாயிருக்கிறார்'' எனக் கூறியிருக்கிறார். இயேசு என்ற பதம் குரு என்ற அர்த்தத்தின்படி நமக்குச் சொந்தமானதே.

இயேசு நாதருடைய மார்க்கத்தை வெள்ளைக்காரர் தானே இந்தியாவுக்குக் கொண்டு வந்தார்கள். வெள்ளைக்காரர் மார்க்கம் நமக்கு வேண்டாமே என்கிறார்கள். கிறிஸ்துவின் மார்க்கம் வெள்ளைக்காரர் மார்க்கம் அல்ல. நம் ஆசியாக் கண்டத்திலேயே உள்ளது. இயேசு நமது ஆசியாக் கண்டத்தில், இந்தியாவுக்கு வடமேற்கே பலஸ்தீனாவில் பிறந்து வளர்ந்தார். நம் நாட்டுத் தபோதனர், ரிஷிகள், பக்தர் முதலியோர் தங்கள் தவத்தில் அறிந்த இலக்ஷணங்களையுடையவராய் அவதரித்தார் இயேசு.

ஆகையால் சுவாமி சுத்தானந்த பாரதியார் கூறுவதாவது :

அருந்தவத் தான்மசக்தி ஆணுருப் பூண்டதன்னான்
பெருந்தவத் தொளியால் ஞானம் பிறங்குறும் ஆசியாவின்
இருந்தவக் கதிரோன் கீழேயெழுந்து மேற்றிசையுமெங்கும்
பொருந்திய சான்றோன் எங்கள் பூசனைக்குரிய நாதன்.

பூவியற் புரைகள் போக்கப் புண்ணியம் புரிந்த நாதன்.
தேவியற் குணத்தால் வெய்ய தீமையே தொழிலாச் செய்த
பாவியர் தமக்கும் அன்பன் ; பரிவதே பிலிற்றும் கண்ணான்;
ஆவியைப் பலிகொடுத்தோன் அறத்திறஞ் சிறக்க அம்மா !

நம் நாட்டு மகரிஷிகள் கூறியிருந்தபடியும், பலஸ்தீனா தீர்க்கதரிசிகள், நீண்ட காலங்களாகக் கூறி

வந்த தீர்க்கதரிசனங்களின்படியும் நீதியும் இரக்கமும் உள்ள கடவுள் தம்மையே பலியிட்டுத் தாரணி மீட்க மனு அவதாரமாயினார். கடவுள் மனிதனாக அவதரிப்பதற்குரிய ஒரே காரணம் :

தமது நீதிக்குப் பங்கம் வராமல், தன்னையே பலியாக ஒப்புக்கொடுப்பதின் நிமித்தம் நீதிக்குத் திருப்தி செய்யவே.

இதுவே தேவ இரட்சிப்பு. தேவஞானம், தேவ அன்பு. தேவ இரகசியம். தேவ நீதி, தேவ லட்சணங்கள் யாவும் இப்பலிக்குள்ளேயே அடக்கம். இப்பலியின் தெய்வீக இரகசியத்தை அறிய, தெளிவும், அமைதலும், சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் மன உறுதியும் உடையோராய்த் தன் சுய ஞானப்பெருமையைத் தள்ளி விட்டுத் தன்னைத் தாழ்த்தித் தனக்காகப் பலியானவர்க்குத் தன்னை தத்தம் செய்து, அவரில் உண்மை அன்பு பூண்டு, அவரை அறிகிற அறிவில் வளர வளர தெய்வீக ஜீவ ஞான ஊற்று தன் இருதயத்தில் பாய்ந்து, பெரிய பெரிய மகான்களும், ரிஷிகளும், ஞானிகளும் பெறாத தெய்வீக ஞானம் பெற்று, ஜீவிய பரிசுத்தமும் பெற்று இன்பமடைவார்கள். அவர்கள் கூறும் இன்ப மொழிகள், உலக ஞானிகளுக்குப் பைத்தியம் போலவும், இரட்சிக்கப்படுகிறவர்களுக்கோ தேவ பெலனாகவும் இருக்கிறது. ''தேடரிய ஞான நிட்டை தெளிய ஊட்டி'' என்னும் போது காடுகள், மலைகள், குகைகள் தேடித் தவசிருப்பவர்களுக்கல்ல. குடும்ப வாழ்க்கையிலுள்ளவர்கள், படித்தவர்கள், படியாதவர்கள், ஏழை, பணக்காரர், யாவருக்கும் ஊட்டுகிறவர். அவரை

அறிந்து அவரில் விசுவாசம் வைப்பவர்கள் யாவருக்குமே இப்பதவி கிடைக்கும்.

மனிதன் தேவ நீதியின்படி தண்டிக்கப்பட வேண்டிய ஸ்தானத்தில் தேவன் தம்மையே பாவிக்குப் பதிலாளியாய் நிறுத்தினார். ஆகையால் "என் தேவனே ! என் தேவனே ! ஏன் என்னைக் கைவிட்டீர் ? என்று ஓலமிடவேண்டிய பாவிக்குப் பதில் தானே கூப்பிட்டார்" அவர் தன்னை அந்த இடத்தில் தேவனாகக் காட்டி விட்டால் பாவிக்கு ஈடேற்ற முண்டாகாமல் போய்விடும். அப்படியானால் தேவன் உலகத்தில் மனிதனாய்ப் பிறந்து வர வேண்டியதில்லை. அவர் வந்த நோக்கம் : பாவிக்குப் பிணையாளியாகவே ; தேவ நீதிக்குத் திருப்தி செய்யவே ; தேவ நீதியை நிறைவேற்றவே. அந்நோக்கத்தோடேயே அவர் தியாக பீடம் ஏறினார். பாடுபட்டார், பலியானார், தேவனால் கைவிடப்பட வேண்டிய நீதியையும் விளக்கினார். என் தேவனே ! என் தேவனே ! ஏன் என்னைக் கைவிட்டீர் ! என்றார். இதன்றோ தேவ நீதி ; இதன்றோ ஓர வஞ்சகமற்ற தேவ இலட்சணம். காம இன்பத்தை அநுபவிக்கவா கடவுள் அவதாரம், அதுவா தேவ இலட்சணம். இல்லை, இல்லை. முக்காலும் இல்லை காமி தேவனாக மாட்டான். இதே சமயத்தில் அவருடைய அன்பை அதாவது இரக்கத்தை நோக்குவோம். என்னே ! அவருடைய அன்பு!! பாவியைத் தண்டனைக்கு விலக்கி விட்டு அவன் ஸ்தானத்தில் தன்னையே பாவி போல நிறுத்திப் பாடுபடுகிறார் ! அந்தச் சமயத்திலும் அன்பின் வார்த்தைகள் மொழிகிறார் ! இதன்றோ தேவ அன்பு ! பரிந்து பேசுகிறார். ஓர் கள்ளனுக்கு முக்தி வாக்கருளிகிறார்!

(அவர் சரித்திரத்தில் விவரம் அறிக) அவர் பிறந்தது முதல் இறந்தது வரை தரித்தரராயினும் தேவனுக்குப் பிரியமுள்ளவர்களாக பரிசுத்த ஜீவியம் செய்யும் மாதிரியாக விளங்கினார் ! தம்மிடத்தில் விசுவாசம் வைத்து, தம்மையே தஞ்சமென்று பற்றிக் கொண்ட எந்தப் பாவியையும் தள்ளாமல் சேர்த்துக் கொண்டு அவர்களுக்கு புகலிடம் அருளி, நாளுக்கு நாள் அவர்களுக்குத் தம்மைப் பற்றிய அறிவையும், விசுவாசத்தையும் அதிகரிக்கச் செய்து, பரிசுத்த வாழ்வு நடத்தப் பலமும் அருளுகிறார் !

நமது நிமித்தம் மரணத்தையும் அடைந்து, சாபம் பிடித்த நமது மரணத்தையும் ஆசீர்வாதமுள்ளதாக்கினார். மரண பயத்துக்கு அடிமைப்பட்டிருந்த பாவியை மரண பயத்தின் அடிமைத் தனத்திலிருந்தும் மீட்டுக் கொண்டார். பாவத்தையும், பாவத்தின் சம்பளமான மரணத்தையும் ஜெயித்து, மூன்றாம் நாள் உயிரோடெழுந்து, மனிதவாழ்வை அமர வாழ்வாக்கும் புனித சக்தியை உடையவரெனத் தமது அடியவர் மூலம் ரூபித்தார். தேவன் மனிதன் ஆனார் ; ஏன் ? மனிதனைத் தேவனாக்க மரணமில்லாதவர் மரணத்துக்குள்ளானார். ஏன் ? மரணத்துக்குள்ளாக்கப்பட்டிருந்த மனிதனை நித்திய வாழ்வுக்குள்ளாக்க, மனிதனை ஐசுரியனாக்க, தரித்திரனாக வாழ்ந்தார். மனிதனின் இருதயத்திலும் வாழும் அன்பரானார். பூரணர் ஆக்கும் பூரணர் ஆனார். தாயுமானவர் கூறுவதாவது : என்ன தான் கற்றாலென் ? எப்பொருளும் பெற்றாலென் ? உன்னை அறியாதார் உய்வாரோ ? பூரணமே.

கடவுள் மனிதனாகப் பிறந்து உலகத்தில் வந்து விட்டால் பரலோகத்தில் இருப்பவர் யார் ? அவர் மனிதரின் பாவத்தை நீக்க, மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாள் தானே உயிர்த்தார். அந்த மூன்று நாட்களிலும் சர்வ ஜீவ ராசிகளுக்கும் படியளந்தவர் யார் ? இப்படிப்பட்ட அநேக கேள்விகளை, அநேகர் கேட்கின்றனர். இவர்கள் நினைக்கிற படி கடவுள், உலகில் அவதாரமானதினால் பரலோகில் இல்லாமல் போய்விடவில்லை. ''துயர் இல்சுடர் ஒளி தன்னுடைச்சோதி நின்ற வண்ணம் நிற்கவே, துயரின் மலியும் மனிதப் பிறவியில் தோன்றி பரலோகத்திலிருந்திறக்கினவரும் பரலோகத்தில் இருக்கிறவருமான மனுஷ குமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை'' (யோ 3:13) என்பதைக் கவனிக்க.

சாது சுந்தர்சிங் காஷ்மீரில் பிரயாணம் போய்க் கொண்டிருக்கையில் ஒரு நதி குறுக்கிட்டது. அதைக் கடக்க பாலமுமில்லை ; தோணியுமில்லை. திகைத்தார். அச்சமயத்தில் இன்னொரு பிரயாணி வந்து, ஏன் திகைக்கிறாய் ? காற்று தூக்கிக் கொண்டு போய் அக்கரையில் விடும் என்று சொல்லிக் கொண்டே, தன் பொட்டணத்திலிருந்து ஒரு தோல்பையை எடுத்து, அதில் காற்றடைத்து, தண்ணீரில் போட்டான். அது மிதந்தது. அதின்மேல் இருவரும் ஏறி அக்கரை சேர்ந்தார்கள். காற்று தோல் பைக்குள் அடைபட்ட போதே மனிதரைத் தூக்கிக் கரை சேர்க்கக் கூடியதாயிருந்தது போல, கடவுளும், எங்கும் எல்லா ஜீவ ராசிகளையும் பிழைப்பூட்டுகிற ஆவிப்

பொருளாய் நின்றும் மனித சரீரத்தை எடுத்து வந்த போது தான் மனிதரைப் பாவக்கடலில் நின்று கடத்தக் கூடியவரானார். காற்றானது பையில் அடைபட்ட போது வெளியிலிருந்த காற்றெல்லாம் இல்லாமலா போய் விட்டது ? எல்லா ஜீவராசிகளும் காற்று இல்லாமல் செத்தா போய்விட்டது ! இல்லை. அது போலவே கடவுளும் பரம குருவாய் உலகில் அவதரித்த போதும், மரணமடைந்த போதும் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகியே நின்றார் (பின்னர் மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்து தேவரீர் உன்னதத்திற்கு ஏறி, சிறைப்பட்டவர்களைச் சிறையாக்கிக் கொண்டு போனீர் ; தேவனாகிய கர்த்தர் மனுஷருக்குள் வாசம் பண்ணும் பொருட்டு, துரோகிகளாகிய மனுஷர்களுக்காக வரங்களை பெற்றுக் கொண்டீர்)

அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை ; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழ் எங்கும் மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளை யிடப்படவும் இல்லை.

கடவுளே குருவாய் வந்து மனிதனை இரட்சித்த இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக் குறித்து நாம் கவலையற்றிருப்போமானால் தண்டனைக்கு எப்படித் தப்பித்துக் கொள்வோம்.

## சி. சுப்பிரமணிய பாரதியார் பாடிய சுதேச கீதங்கள் (2ம் பாகம் 153ம் பக்கம்)

ஈசன் வந்து சிலுவையில் மாண்டான் ;
எழுந்துயிர்த்தனன் நாள் ஒரு மூன்றில் ;
நேச மா மரிய மக்தலேனா
நேரிலே இந்தச் செய்தியைக் கண்டாள் ;
தேசத்தீர் ! இதன் உட்பொருள் கேளீர் :-
தேவர் வந்து நமக்குட்புகுந்தே
நாசமின்றி நமை நித்தம் காப்பார்,
நம் அகந்தையை நாம் கொன்று விட்டால்

அன்பு காண் மரியாள் மக்தலேனா
ஆவி காணுதிர் யேசு கிறிஸ்து
முன்பு தீமை வடிவினைக் கொன்றால்
மூன்று நாளினில் நல்லுயிர் தோன்றும்,
பொன் பொலிந்த முகத்தினிற் கண்டே,
போற்றுவரள் அந்த நல்லுயிர் தன்னை,
அன்பெனும் மரிய மக்தலேனா
ஆஹா ! சாலப் பெருங்களி யிஃதே

உண்மை என்ற சிலுவையிற் கட்டி
உணர்வை ஆணித் தவங் கொண்டடித்தால்
வண்மைப் பேருயிர் - யேசு கிறிஸ்து
வான மேனியில் அங்கு விளங்கும்
பெண்மை காண் மரியாள் மக்தலேனா,
பேணும் நல்லறம் யேசு கிறிஸ்து.
நுண்மை கொண்ட பொருளிது கண்டீர்
நொடியிலிஃது பயின்றிடலாகும்.

## சுவாமி சுத்தானந்த பாரதி ஏசுநாதரைப் பற்றிப் பாடியது.

மரணத்தை வென்றவனே ! மன்னவனே அன்புருவே !
தரணி உய்யப் பிறந்தவனே ! தாவீதரசன் குலக் கொளுந்தே
கருணையுடன் அவதரித்தாய் ! காத்திடவே மெய்யறத்தை
அரண் எமக்குன் திருவருளே அறிவெல்லாம்
அமர்ந்தவனே!
நலத்தினைப் பழகிக் காட்டி நன்னெறித் தவத்தில் ஓங்கி
நலத்தினை மாந்தர் உய்ய நவின்றனை அன்பினாலே,
நலத்தினை அறியா மாக்கள் நவிலருங் கொடுமை செய்ய
நலத்தினை அறியக் காட்ட நல்கினை பலியாய் உன்னை.
உன் பெயராலே இந்த உலகினில் உயிர்ப்போம் ! நாங்கள்
உன் பெயராலே உண்போம், உன் அருள் சிறக்க வாழ்வோம்
உன் பெயராலே எங்கும் உத்தமத் தொண்டு செய்வோம்.
உன் பணித் திறத்திற்கெங்கள் உழைப்பெலாம் ஈந்து
வாழ்வோம்

## மகா வித்வான் H.A.கிருஷ்ண பிள்ளை பாடிய இரக்ஷணிய யாத்திரிகம்

கன்னி பாலனாய்க் காசினி தனில் அவ தரித்து
மன்னு ஜீவகோ டிகளெலாம் வான் கதி மருவத்
தன்னுயிர்ப்பரித்தியாகமுஞ் சிலுவையிற் றந்த
என்னு பாசனா மூர்த்தியை அஞ்சலித் திடுவோம்

முனைவனை அறிய வேண்டில் முற்றும் நீ இயற்றும்
பாவ
வினையெலாம் தொலைய வேண்டில் வீட்டின்பம்
அடைய வேண்டில்
இனிவரும் தேவ கோபம் எரித்திடா திருக்க வேண்டில்
மனுவுரு ஆய யேசு மலரடி வணங்காய் நெஞ்சே

தனியிடத் திருந்து பாவச் சழக்கினைக் கருதி, ஆவி
அனுமதி பெற்றுத் தேவ அன்பினை இதயத் துன்னி
கனியும் உள் ளன்பினோடு கண்ணீர் ததும்ப நின்று
மனுஉறு ஆய யேசு மலரடி வணங்காய் நெஞ்சே.

தனுகரணங்கள் ஓய்ந்து தளர்ந்து மூச் சொடுக்குங் காலை
மனைமகார் துணையா வாரோ மருங்கிருந் தழுவதல்லால்
அனவர தமும் உனக்கோர் ஆம் துணைவிரும்பில் இன்னே
மனுஉரு ஆய யேசு மலரடி வணங்காய் நெஞ்சே.

உலகம் மகிழ்ந்தீடேறப் பரலோக வாசிகளுக்கு வகையேற,
அலகை உளந் திகில் ஏற, அகண்டபரி பூரணனார்
அருள் மெய்வாக்கு
விலகிலதாய் நிறைவேறத் துதியேற நர உருவாய் விளங்கி
அன்பால்
சிலுவைமிசை ஏறிய மெய்ஞ்ஞான சூரியனடியைச்
சிந்தை செய்வோம்.

## மகா வித்வான் H.A.கிருஷ்ண பிள்ளை பாடிய இரக்ஷணிய மனோகரம் 3:6

தீய நரக கதவடைத்ததார் ? அடை பட்ட
செப்பரிய மோட்ச கதியின்
செம்பொன் கபாடம் திறந்ததார் ? நரர் எலாம்
தீவினைக் காளாகவே
மாயம் புரிந்த சண்டாளப் பசாசனை மடித்ததார்
நன்றியறியா
மாபாவிகட்கென்றும் அழியாத பேரின்ப வாழ்வருள
ஏழை மனுவாய்
நேயமோ டுதித்து, நன்னெறியை உபதேசித்து
நீசர்கட்காய்ப் பிணை சொல்லி
நின்றதார் ? வருதேவ நீதியின் தண்டனையை
நேர்ந்தரிய பாடடைந்தைங்
காயம்படச் சிலுவை மீது பிராணத்தியாகம்
செய்ததார் கொல் ? அந்தக்
கருணாகரன் தன் இரு சரணாரவிந்த மலர் கருதி
அஞ்சலி செய்குவாம்.

## திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் எழுதிய "கிறிஸ்துவின் அருள் வேட்டல்"

### என்ற நூலில் சில கவிகள் :

அன்பே ! உனைக்காண் பரிதென அன்னை அகந்திரண்டாய்,
என்புதோல் போர்த்து நடந்தாய், இரு நிலத்தில்
மன்பதை நோய்கண் டிரங்கி இரங்கி மரித்தெழுந்தாய்,
பொன்னுரு வில்லையேல் புந்தியில் என்ன பொலிந்திடுமே

உலகிறங்கிக் குமரனன்பை உணர்த்திய பின் மக்காள்
யோகமென்றும் யாகமென்றும் விரதமென்றும் உழலல்
கலகமென்று மனை நீத்தல் தாடி சடைவளர்த்தல்
கனல்பசியால் வீடுதோறுங் கையேந்தல் முதலாம்
பல நெறிகள் படர்தலென்ன ? பகுத்தறிமின் அறிமின்
பத்தி நெறி யொன்றில் நின்று பாவமுறை யிட்டுச்
சிலுவையிலே சிந்தை வைத்தால் தீமையெல்லாம் அகலும்
செகமெல்லாம் சோதரமாய்ந் திகழ்தல் பெற லாமே

மாசு மிகுந்த மனித இருள் போக்க வந்த
ஏசு உனைமறவேன் என்று
கன்னி வழிமலர் ந்த கற்பகமே என்னுயிரே
முன்னி உனை அணைந்தேன் முன்
ஆசைக் கடல் விழுங்க ஆளானேன் அப்பா உன்
நேசம் மறித்ததுவே நின்று
பிழைபொறுக்குந் தெய்வம், பெரும ! நீ என்றே
குழையுளத்தால் நானடைந்தேன் கொள்
வன் பேய் முனைப்பழித்த வள்ளல் கிறிஸ்துவே
உன்சேயாய் வாழ்வேன் உணர்ந்து
என்னுள்ளே நீ பிறந்தாய் ஏசு பெருமானே
உன்னுள்ளே யானிறந்தேன் உற்று.

ஏசினேன் உன்னை இனிய மொழியை இளமையிலே
கூசினே னில்லை குறையினைப் பின்னே குறித்தழுதேன்
ஏசுவே உன்னருள் என்னுளம் எய்தியதெப்படியோ
மாசிலா அன்பே ! மகனாய் உருக்கொண்ட மாணிக்கமே
மலரைப் பறிக்கிலென் மாலை புனைந்திலென் மந்திரத்தின்
ஒலியைப் பெருக்கிலென் ஓவெனப் பாக்களை ஓதிலென்ன !
சிலுவையும் ஆணியும் செந்நீரும் சேர்ந்த திருவுருவம்
பொலியும் உளத்தினில் பொன்றிடும்பாவப் பொருப்புகளே.

அன்பினால் யாக்கை ஏற்ற ஐயனே ! போற்றி போற்றி
மன்பதை பாவந்தீர்க்க மரித்தவா ! போற்றி போற்றி
இன்புற உயிர்தெழுந்த ஈசனே ! போற்றி போற்றி
என்பிழை பொறுக்கும் ஏசு எந்தையே ! போற்றி போற்றி

## மகா வித்வான் H.A.கிருஷ்ண பிள்ளை பாடிய இரக்ஷணிய சமய நிர்ணயம்

## 243ம் பக்கம்

தொக்கபாவமன்னிப்பு நித்திய ஜீவ நன்மையுஞ்
சுகிர்தமும், மிக்க பேரின்ப வீடு நங்கி றிஸ்தி
யேசுவைவிசு வாசிக்கிற்
கைக்குள் வந்ததிங் கையமொன்றிலை
கண்டுகேட்டுணர்ந் துலகுளீர்
தக்கவாறு நன் றாய்மின் ரக்ஷண்ய சமய நிர்ணயந் தானிதே.

நம்மை நோக்கிய தண்டனைக்கொரு நடுவராய்
நின்று தாங்கியும்
செம்மையிற்றிறம் பாதுநித்திய ஜீவபுண்ணியந் திரட்டியும்
இம்மைக்குமறு மைக்குநன்மையுண் டாகவிங்கு தித்
துலகுளீர்
தம்மையுந் தந்த சாமிரக்ஷண்ய சமயநிர்ணயந் தானிதே
கிழக்கெழுஞ்சுடர் போலச் சத்தியம் கிளரக்
கண்டினுங் கேதமார்
பழக்கமான தீ வினையை வேரறப் படுத்து
நன்னெறி பற்றிடீர்
வழக்குரைத்துவா ணாளைப் போக்குதன்
மதிகொலோவுலகத்துளீர்
சுழக்கை விட்டுளந் திரும்புமரக்ஷண்ய சமய
நிர்ணயந் தானிதே

## திருமந்திரம் 7.11:1, 13:1, 3:1-2

உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு சுற்றாலை
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளித் தெளிவார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளா மணிவிளக்கே.

படமாடுங் கோயில் பரமர்க் கொன்றீயில்
நடமாடுங் கோயில் நம்பர்க் கிங் காகா
நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடுங் கோயில் பரமர்க் கங்காகும்.

உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறு பொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே,

உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே.

## குறள் 85. அதி. 7

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு

(கரு) அரு-பெறுகிறதற்கு அருமையான, மறை-வேதத்தை, சோரும் - தனக்கு நன்மை என்று அறியாமல் விட்டு விடுகிற, அறிவிலான் - புத்தியில்லாதவன், பெரு-மிகுந்த, மிறை-துன்பத்தை, தானே-தானே, தனக்குச் செய்யும் - தனக்குச் செய்து கொள்ளுவான்.

திருவசனத்தை அவமதிக்கிறவன் நாசமடைவான் ; கற்பனைக்குப் பயப்படுகிறவனோ பலன் அடைவான்.
நீதி 13:13

## திருநீறு

சிவ வாக்கியம்

இருக்கு நாலு வேதமும் எழுத்தறவே ஓதினும்
பெருக்க நீறு பூசினும் பிதற்றினும் பிரான் இரான்
உருக்கி நெஞ்சை உட்கலந்து உண்மை கூற வல்லிரால்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்து கூடலாகுமே.

**பட்டினத்தார்**

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்க வகையறிந்தாயில்லையே, மாமறை நூல்
ஏற்றிக் கிடக்கும் ஏழுகோடி மந்திரம் என்ன கண்டாய் !
ஆற்றிற் கிடந்து துறை அறியாமல் அலைகின்றையே.

மோட்சத்தைக் கண்டது யார் ? நரகத்தைக்கண்டது யார் ? என்று கேட்கிறார்கள். சிலருக்கு இப்பொழுதே மோட்சத்தைக் காணவும் ஆசை. அப்படிப்பட்டவர்களுக்கு சற்குரு கூறுவது :

''ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால், தேவனுடைய இராஜ்யத்தைக் காண மாட்டான்'' ''ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும், பிறவாவிட்டால் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான்'' ''மாம்சத்தினால் பிறப்பது மாம்சமாயிருக்கும் ஆவியினால் பிறப்பது ஆவியாயிருக்கும்'' சற்குருவின் நாமத்தின் மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார். அவர்கள் இரத்தத்தினாலாவது மாம்ச சித்தத்தினாலாவது புருஷனுடைய சித்தத்தினாலாவது பிறவாமல் தேவனாலேயே பிறந்தவர்கள்''

**கைவல்லிய நவ நீதம், தத்துவ விளக்கப்படலம்**
**86--ம் பாட்டு**

ஐயனே எனதுளே நின்றனந்த சென்மங்களாண்ட
மெய்யனே உபதேசிக்க வெளிவந்தகு ருவே போற்றி
உய்யவே முத்திநல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்
செய்ய வேறொன்றுங் காணேன் திருவடி போற்றி போற்றி.

# பரமகுரு

## 11-3-58ல் தமிழ்நாடு மதிப்புரையில் கூறியிருப்பது.

கடவுளை நமததாக்கிக் கொள்வதற்குக் குருவின் உதவி நமக்கு வேண்டும். அக்குருவைத் தேடி பிடித்து, அவருடன் வாழ்ந்து, பாவத்திலிருந்து விடுதலை பெறுவது தான் முத்தி எனப்படும்.

பரம குருவின் பண்புகள் யாவை என்பதை இச்சிறுநூல் நன்கு விளக்குகிறது. 'கு' என்பதற்கு இருள், அஞ்ஞானம், பாவம் என்றும் 'ரு' என்பதற்கு ஒழித்தல் என்றும் பொருள் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'இயேசு' என்பதற்குக் 'குரு' என்று பொருள் கொடுத்து, கிரேக்க மொழியாகிய "இயேசு" நமக்கும் உரியது என்று கூறப்பட்டிருக்கிறது.

சுப்பிரமணிய பாரதியும் சுத்தானந்த பாரதியும் இயேசுவைப் புகழ்ந்திருக்கும் பாக்கள் இந்நூலில் தரப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு சமயப் பெரியார்களின் சிறந்த கருத்துக்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

சமய ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இந்நூல் பெரிதும் பயனளிக்கும் என்பதில் ஐயமில்லை.

– டி.ஆர்.ஆர்.

